# பகவத் பாதை

# BAGAVATH PATHAI

தமிழ் மாத இதழ்

மலர் 7 | இதழ் 7 | நவம்பர் 10, 2020 | வருடச்சந்தா ரூ 100/- Volume : 7 | Issue 7 | November 10th, 2020 | Annual Subscription Rs. 100/-



## அகம் பிரம்மாஸ்மி

# பகவத் பாதை
தமிழ் மாத இதழ்



"மனதின் இயற்கை, பிரவாகமாக இயங்குவதே என்பதை தெரிந்து கொண்ட பிறகு அறிவுக்கு அகத்தில் வேலை எதுவும் இல்லை. இதை புரிந்து கொண்ட அறிவு அகத்தில் சரணாகதி அடையும்போது அக இயக்கம் அனைத்தும் தாமாக இயங்கும் இயக்கமாக – இறைவனின் இயக்கமாக ஒன்றாகி விடுகிறது.

- ஸ்ரீ பகவத்

## ஸ்ரீ பகவத் குடில்கள்



## உள்ளே



கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? (அ) பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?





Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu India
www.sribagavathmission.org
www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

V.A.P. SHARAVANAN - 99942 05880
Dr. N. KAILASAM - 94432 90559
K.S. JEEVAMANI - 97891 65555



This book Designed by
SRI ESPARI GRAPHICS, Salem-3.
Cell : 90926 46260, 98651 34075


அன்பிற்கினிய ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களுக்கு வணக்கம்.

நமது ஸ்ரீ பகவத் பவன் ஆசிரமம், சேலம் பெரிய கவுண்டாபுரத்தில் இயற்கை எழில்மிகு ஜருகுமலையின் அடிவாரத்தில் அமைந்துள்ளதை அனைவரும் அறிவோம்.

இங்கு ஒவ்வொரு மாதமும் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஞான முகாம் சிறப்பாக நடைபெற்று வருகிறது. இதில் பலரும் கலந்துகொண்டு ஞானத் தெளிவு பெற்றுச் செல்கின்றனர்.

முகாம்களுக்குக் குடும்பத்துடன் வருபவர்கள் சேர்ந்து தங்குவதற்கு போதிய வசதியில்லை.

ஆதலால் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஆலோசனைப்படி இங்கு குடும்பத்துடன் வந்து தங்கி செல்வதற்கு ஏற்ற வகையில் எல்லா வசதிகளுடன் கூடிய 8 பெரிய (11'x16') அறைகளும் 8 சிறிய (8'x8') அறைகளும் தனித்தனி குளியலறைகளுடன் (4'x6') அமைக்கப்பட்டு கட்டிட வேலைகள் நடைபெற்று வருகின்றன.

இதில் 8 பெரிய அறைகளுக்கான ஸ்ரீ பகவத் காட்டேஜ் உறுப்பினர் சேர்க்கை நிறைவடைந்துவிட்டது.

சிறிய அறைகளுக்கான உறுப்பினர் நன்கொடை ரூபாய் 3 லட்சம் என நிர்ணயம் செய்து இருக்கிறோம். அந்த வகையில் இதுவரை இரண்டு உறுப்பினர்கள் சேர்ந்துள்ளார்கள். இன்னும் ஆறு உறுப்பினர்கள் மட்டும் சேர்க்கப்படவுள்ளனர்.

ஸ்ரீபகவத் காட்டேஜ் உறுப்பினர்கள், வருடத்தில் எத்தனை நாட்கள் வேண்டுமானாலும் இதில் தங்கி தங்களுக்குச் சொந்தமாக பயன்படுத்திக் கொள்ளலாம். இவர்களது உடமைகளையும் இவர்களது அறையிலுள்ள Locker-ல் பாதுகாப்பாக வைத்துச் செல்லலாம்.

குறிப்பிட்ட காலத்திற்குப் பிறகு ஸ்ரீபகவத் மிஷனின் அனுமதியோடு இவர்கள் தங்களது Membership – ஐ மற்றவர்களுக்கு மாற்றலாம்.

இவர்கள் இங்கு தங்காத நாட்களில் மட்டுமே மற்றவர்கள் ஞான முகாம் நடைபெறும் நாட்களில் மட்டும் தங்க அனுமதிக்கப்படுவார்கள். லாக்கர்களைப் பயன்படுத்தும் உரிமை அவர்களுக்குக் கிடையாது.

இன்னும் ஆறு உறுப்பினர்கள் மட்டுமே சேர்க்கப்பட உள்ளதால், ஆர்வம் உள்ளவர்கள் உடனடியாக தொடர்பு கொள்ள வேண்டுகிறோம்.

இது சம்பந்தமான சிறப்புத் தகவல்களுக்கு நேரடியாக போனில் தொடர்பு கொள்ள வேண்டுகிறோம்.

அன்புடன்
**ஸ்ரீ பகவத் மிஷன்,** சேலம்-3. 99942 05880, 97891 65555



# அகம் பிரம்மாஸ்மி

- ஸ்ரீ பகவத்

முயற்சி திருவினையாக்கும், உழைப்பே உயர்வு என நாம் சிறு வயது முதலே கற்றுள்ளோம். நம்முடைய வெற்றி தோல்விகள் அனைத்தையும் நமது முயற்சியே நிர்ணயம் செய்கிறது.

நமது வாழ்வின் ஒவ்வொரு கட்டத்திலும் நமது முயற்சிகளே நம்மை வாழ வைத்துக் கொண்டிருக்கின்றன.

ஒருமுறை பாபநாசம் பக்கமுள்ள மேற்குத் தொடர்ச்சி மலையின் ஓர் உயர்ந்த பகுதிக்கு எனது நண்பர்களுடன் சென்றிருந்தேன்.

காவி தரித்த சாமியார் ஒருவர் எங்களுக்கு வழி காட்டி எங்களை அழைத்துச் சென்றிருந்தார்.

எங்களது பயணத்தின் முடிவில் காட்டாறு ஒன்றை அடைந்தோம்.

அது ஆவேசமாக ஆர்ப்பரித்து ஓடிக்கொண்டிருந்தது.

நாங்கள் எடுத்துச் சென்ற உணவை அந்த ஆற்றங்கரையில் அமர்ந்து உண்ணலாம் என முடிவு செய்திருந்தோம்.

அந்தக் காட்டாற்றில் நாங்கள் வருவதற்கு முன் தினம் பெரிய யானை ஒன்று அடித்துச் செல்லப்பட்டு விட்டதாக அந்த சாமியார் கூறினார்.

அது ஒன்றும் எங்களுக்கு ஆச்சரியமாகப் படவில்லை. அந்த ஆற்றின் வேகம் அத்தனை பயங்கரமாக இருந்ததை நாங்களே நேரடியாகப் பார்த்துக்கொண்டிருந்தோம்.

ஆனால் அந்த சாமியார் அடுத்ததாக எங்களுக்குச் சொன்ன ஆலோசனைதான் எங்களுக்கு ஆச்சரியமாகப் பட்டது.

"நாமும் இந்த ஆற்றில் குளித்துவிட்டு சாப்பிடலாம்" என அவர் ஆலோசனை வழங்கினார்.

அவர் கூறியது எங்களுக்கு பயம் எதனையும் ஏற்படுத்தவில்லை.

ஏனெனில் அவர் விளையாட்டாகக் கூறுகிறார் என்றே எடுத்துக் கொண்டோம்.

அதனால் நாங்களும் விளையாட்டாக அவரிடம் "நீங்கள் இறங்கிக் குளியுங்கள். நாங்கள் கரையிலிருந்து கொண்டே உங்களுக்கு வேண்டிய உதவிகளைப் பண்ணுகிறோம்" என்று சிரித்துக்கொண்டே கூறினோம்.

ஆனால் அவர் விளையாட்டாகக் கூறியிருக்கவில்லை. உண்மையாகவே அவர் குளிக்கும் நோக்கத்துடன் தான் கூறியிருக்கிறார்.

அவர் இறங்கிக் குளிக்கும் வசதியான இடமாகப் பார்த்தவாறே ஆற்றோரமாக நடக்க ஆரம்பித்தார்.

அவரைப் பின்தொடர்ந்து நாங்களும் நடந்தோமே தவிர ஆற்றில் இறங்கிக் குளிக்கும் எண்ணம் துளிகூட எங்கள் எவருக்கும் கிடையாது.

அவர் குளிப்பதற்காக ஓர் இடத்தைத் தேர்வு செய்து ஆற்றினுள் இறங்க ஆரம்பித்தார்.

அப்போதுதான் அவர் அந்த ஆற்றில் குளிக்கும் வித்தையை எங்களுக்குக் கற்றுக் கொடுத்தார்.

அதன்பிறகு மழைக் காலத்தில் பெருக்கெடுத்தோடும் எந்த ஆற்றை கண்டும் நான் பயப்படுவதில்லை.

அத்தகைய ஆறுகளில் எப்படி குளிப்பது என நானும் பலருக்குக் கற்றுக் கொடுத்திருக்கிறேன்.

எவ்வளவு பயங்கர வேகமுடைய காட்டாறாக இருந்தாலும் கூட குளிக்கும் வசதி உடைய இடங்கள் அமைந்திருக்கும்.

அது என்ன வசதி?

ஆற்றின் வேகத்தையும் அதன் செயல்பாட்டையும் இதுவரை நீங்கள் பொதுவாகப் பார்த்திருப்பீர்கள்.

இனி ஒருமுறை அத்தகைய ஆறுகளை எதனையாவது நீங்கள் பார்த்திடும் வாய்ப்பு கிடைத்திடும் பட்சத்தில் பின்வரும் தகவலையும் இணைத்துப் பாருங்கள்.

நாங்கள் பார்த்த அந்த ஆறு மேற்குத் திசையிலிருந்து கிழக்குத் திசையை நோக்கிப் பாய்ந்து கொண்டிருந்தது.

ஆற்றின் பெரும்பாலான அம்சம் மேற்கிலிருந்து கிழக்கு நோக்கி ஓடுவதாகவே இருந்தாலும்

எங்கேயோ சில இடங்களில் மட்டும்

அந்த ஆற்றின் ஒரு பகுதி கிழக்கிலிருந்து மேற்கு நோக்கி

– அதாவது,

அந்த நீரோட்டத்துக்கு எதிராக நகர்ந்து கொண்டிருப்பதைப் பார்க்க முடியும்.

முன்னோக்கிச் செல்லும் நீரின் வேகமுமோ அல்லது ஆற்றுக்குள் இருக்கும் பாறைகளின் அமைப்போ காரணமாக இருந்து

சில பகுதிகளில் நீரை பின்னோக்கி திருப்பி விடும்.

அந்தப் பகுதியில் வேகங்கள் அனைத்தும் சமன்பட்ட நிலையில் தண்ணீரின் சில பகுதிகள் தெப்பம் போலவே அசைவற்றுக் காணப்படும்.

அந்தப் பகுதியில் நாம் குளிப்பதென்பது ஓட்டம் இல்லாத தெப்பக் குளத்தில் இறங்கிக் குளிப்பதாகவே இருக்கும்.

நாம் எவ்வளவு பெரிய நீச்சல் வீரராக இருந்தபோதிலும் காட்டாற்றின் வேகத்தை எதிர்த்து எதனையும் செய்யமுடியாது.

ஆனால் அதே சமயம் அந்த ஆற்றின் தெப்பமான பகுதியில் நீச்சல் தெரியாத சிறுமி கூட பயமில்லாமல் இறங்கிக் குளிக்க முடியும்.

இந்தக் காட்டாற்றைப் போன்றதுதான் நம் மனது.

அதுவும் இரண்டு பகுதியாக செயல்பட்டுக் கொண்டிருக்கிறது.

நம்முடைய பங்களிப்புக்கு வாய்ப்பு எதனையுமே கொடுக்காமல், தாமாகவும் சுயமாகவும் இயங்கும் ஒரு பகுதி நம் மனதில் உள்ளது.

இது நம் மனதின் ஒரு பகுதி.

அதன் இன்னுமொரு பகுதியில் நமது பங்களிப்புக்கான வாய்ப்பும் சாத்தியக்கூறும் உள்ளன.

முதற்பகுதியில் நமது பங்கு கிடையாது.

இரண்டாவது பகுதியில் நமது பங்கும் உள்ளது.

இந்த இரண்டு பகுதிகளின் செயல்பாடு குறித்து நாம் ஏற்கனவே பல அம்சங்களிலும் பலவாறாகப் பார்த்துள்ளோம்.

புதியதாக நாம் வேறு எதனையும் பார்க்கப் போவதில்லை.

இருந்தாலும் நாம் ஏற்கனவே தெரிந்து கொண்டதை

மீண்டும் ஒரு முறை சரி பார்த்துக் கொள்வதற்காக மட்டுமே இந்த ஆய்வை மேற்கொண்டு உள்ளோம்.

ஒரு காலத்தில் நல்ல மன அனுபவங்களோடு மனதைப் பராமரித்து வரவேண்டும் என்பதையே இலக்காகக் கொண்டு

சாதனைகள் பலவற்றை மேற்கொண்டு வந்தோம்.

மனதின் இயற்கை பிரவாகமாக இயங்குவதே என்பதைத் தெரிந்து கொண்ட பிறகு

நமது மன இயக்கத்தை சுதந்திரமாக இயங்குவதற்கு அனுமதி கொடுத்துவிட்டோம்.

மன இயக்கத்தின் முதற்பகுதியில் நமக்கு வேலை கிடையாது.

அதன் இரண்டாவது பகுதியில் மட்டுமே நமக்கு வேலை உண்டு.

ஆனாலும் கூட இந்த இரண்டு பகுதிகளும் மாறி மாறி நிகழ்ந்து கொண்டுதான் இருக்கின்றன.

நம் மனதின் முதற்பகுதியில் நமக்கு வேலை எதுவும் கிடையாது என்பதைப் புரிந்துகொண்ட புதிதில் நமக்கு வாழ்க்கையே மிகவும் எளிதாக மாற்றி விட்டிருந்தது.

நமது மனம் எளிமையாகவும் இனிமையாகவும் இயங்கி வந்ததை நாம் அனைவராலும் உணரமுடிந்தது.

ஆனால் காலப்போக்கில் நமது மனதின் மென்மைத் தன்மை குறைந்து அகப் போராட்டங்கள் அதிகரித்துள்ளதாகப் பலர் தங்களது அனுபவங்களைப் பகிர்ந்து உள்ளனர்.

இங்கு என்ன நிகழ்ந்துள்ளது?

நமது மன இயக்கம் இரண்டு பகுதிகளாக இயங்குகிறது என்பதைப் பார்த்தோம்.

தாமாக இயங்கும் முதற்பகுதி.

நம்முடைய பங்களிப்புள்ள இரண்டாம் பகுதி.

– இப்படி இரண்டு பகுதிகளாக இயங்குகின்றன.

முதற்பகுதியில் நமக்கு எந்த வேலையும் கிடையாது என்பதை நாம் கண்டு பிடித்துள்ளோம்.

இதையே ஞானம் என்று கூறுகிறோம்.

இந்த ஞானத்தை அடைந்தது முதற் பகுதியா

அல்லது இரண்டாவது பகுதியா?

முதற் பகுதியில் ஆய்வு செய்வதற்கோ முடிவுக்கு வருவதற்கோ வாய்ப்பு எதுவும் கிடையாது.

இவை அனைத்தும், நமது பங்களிப்புள்ள இரண்டாவது பகுதியில் மட்டுமே உள்ளது.

நமக்கு ஏற்படும் விடுதலை அல்லது முக்தி என்பது எங்கே உள்ளது?

அது நம் மன இயக்கத்தின் முதற்பகுதியில் உள்ளதா?

அல்லது நமது பங்களிப்பு உள்ள இரண்டாவது பகுதியில் உள்ளதா?

விடுதலை அல்லது முக்திக்கு நமது முயற்சி தேவையில்லை. அது இயற்கையானது; தாமாக இயங்குவது.

அதற்குத் தொந்தரவு கொடுப்பது அல்லது தொந்தரவு கொடுக்காமலிருப்பது வேண்டுமானால் நமது கைகளில் இருக்கலாம். ஆனால் அதனுடைய சுதந்திரமான இயக்கம் நமது கைகளில் இல்லை.

ஆகவே முக்தி அல்லது விடுதலையின் இயக்கம் நமது மன இயக்கத்தின் முதற் பகுதியிலேயே உள்ளது.

மனதின் முதற்பகுதி சம்பந்தமாக, இரண்டாவது பகுதிக்கு வேலைகள் எவையாவது உள்ளனவா?

முதற்பகுதி என்பது முடிந்து போன பிறகுதான்

அது இரண்டாவது பகுதிக்கு தெரிகிறது.

முடிந்துபோன ஒன்று சம்பந்தமாக இரண்டாவது பகுதிக்கு எந்த வேலையும் கிடையாது.

இரண்டாம் பகுதிக்கு இரண்டாம் பகுதியில் மட்டுமே வேலை உள்ளது.

இரண்டாம் பகுதியைக் கொண்டே நாம் நமது உலகத்துக் கடமைகள் அனைத்தையும் நிறைவேற்றுகிறோம். நமக்கு வேண்டிய செயல்த் திட்டங்கள் அனைத்தையும் இந்த இரண்டாம் பகுதி மூலமாகவே வடிவமைக்கின்றோம்.

முதற் பகுதியை நிர்வாகம் செய்யும் அதிகாரம் எதுவும் இரண்டாம் பகுதிக்கு இல்லாத பட்சத்தில்,

அவை இரண்டுக்கும் என்னதான் தொடர்பு?

அனுபவங்கள் அனைத்தும் முதற்பகுதியில் ஏற்பட்டு மறைந்தாலும்

இந்த இரண்டாம் பகுதியானது அவையாவும் தனக்கு ஏற்பட்டதாகவே கருதுகிறது.

அதனால்தான் அவற்றை நிர்வாகம் செய்து தனது கட்டுப்பாட்டுக்குள் வைத்திருக்க,

இந்த இரண்டாம் பகுதி தன்னையறியாமலேயே போராடி விடுகிறது.

நாம் ஏதாவது ஒரு தியானத்தைச் செய்வதாக வைத்துக்கொள்வோம்.

அதன் விளைவாக நமக்குள் நல்ல விதமான அனுபவங்கள் ஏற்படுகின்றன.

இந்த அனுபவங்கள் ஏற்படுவது முதற்பகுதியிலா அல்லது இரண்டாவது பகுதியிலா?

நமக்கு ஏற்படும் அனுபவங்கள் நமது முயற்சியில் ஏற்பட்டாலும் சரி, அல்லது தாமாக ஏற்பட்டாலும் சரி,

அனைத்து அனுபவங்களும் முதற் பகுதியிலேயே ஏற்படுகின்றன.

நாம் செய்த தியானத்தின் காரணமாக ஏற்பட்ட அனுபவமாயினும் அது முதற் பகுதியில்தான் ஏற்படுகின்றது.

தியானம் நமது கட்டுப்பாட்டில் இருக்கலாம். ஆனால் அதனால் ஏற்படும் அனுபவங்கள் நமது கட்டுப்பாட்டில் இல்லை.

நல்ல அனுபவங்கள் விளைவாக ஏற்படுவதைக் கருத்தில் கொண்டு,

நாம் சில தியானங்களைக் கூட பயின்று வரலாம்.

அதில் தவறு ஏதும் கிடையாது.

ஆனால் இதன் மூலம், முதற்பகுதி நமது கட்டுப்பாட்டுக்குள் வந்து விட்டது என தவறாக மட்டும் புரிந்து கொள்ளக் கூடாது.

மனதின் முதற்பகுதி, நம்மைக் காட்டிலும் உயர்ந்த – நமக்குக் கட்டுப்படாத பகுதி – இறைவனாலும் இயற்கையாலும் நிர்வகிக்கப்படும் அம்சம் உள்ள பகுதி

என்ற அறிவுடைமையுடன் இரண்டாவது பகுதி செயல்படுவது தான் ஞானம் ஆகும்.

முதற்பகுதியில் இன்பம் அனுபவமாகலாம். துன்பம் அனுபவமாகலாம் அவை அனைத்தும் நம்மை மீறிய ஒன்று எனக் கருதும் போது,

இரண்டாம் பகுதி, முதற்பகுதியோடு இயல்பாக இணைந்து கொள்கிறது.

இந்த இரண்டாம் பகுதி எந்த அளவுக்கு முதலாவது பகுதியுடன் இணைந்து கொள்கிறதோ

அந்த அளவுக்கு இரண்டாம் பகுதியும்

முதற்பகுதியின் தகுதிக்கு உயர்ந்து விடுகிறது.

முதற்பகுதி?

அது இன்பம் ஆயினும் சரி அல்லது துன்பம் ஆயினும் சரி,

அதுதான் **முழுமுதற்கடவுள்.**






V.A.P. **சரவணன்.** சேலம்.
செல் : 99942 05880

# கேள்வி ? பதில்...

புரிந்து கொண்டதில் ஏதேனும் தவறு இருக்கிறதா?

**கேள்வி :** மனதின் இயக்கத்தைப் பற்றிய புரிதலை ஒரு மாத காலமாக zoom மீட்டிங் வாயிலாக நான் புரிந்து கொண்டேன். இதனால் பல காலமாக சந்தித்து வந்த மனப் போராட்டம் நீங்கி மனம் அமைதி அடைந்து இருந்தது.

இது என் மனதிற்கு மகிழ்வையும் நிறைவையும் அளித்தது.

ஆனால் இப்பொழுது முன்புபோல அந்த அமைதியும் மகிழ்ச்சியும் ஏற்படுவது இல்லை. அது ஏன்? நான் புரிந்து கொண்டதில் ஏதேனும் தவறு இருக்கிறதா? என் மனம் முன்புபோல அமைதியாகவும் மகிழ்ச்சியாகவும் இருப்பதற்கு நான் என்ன செய்ய வேண்டும்?

**பதில் :** நீங்கள் மனமகிழ்ச்சியையும் புரிதலையும் ஒன்றாக இணைத்து முடித்துப் போட்டுக்கொண்டு குழம்பிப் போய் இருக்கிறீர்கள்.

மன மகிழ்ச்சி என்பது வேறு, மனதின் இயக்கத்தைப் பற்றிய புரிதல் என்பது வேறு. மன மகிழ்ச்சி என்பது மன அனுபவம் சார்ந்தது.

புரிதல் என்பது, மனதின் இயக்கம் எப்படி செயல்படுகிறது என்பதை அறிவுபூர்வமாகப் புரிந்து கொள்வது. இந்த இரண்டையும் தெளிவாக பிரித்து புரிந்து கொண்டால் உங்கள் பிரச்சனை தீர்ந்து விடும்.

இந்த புரிதலுக்கு வருவதற்கு முன்புவரை, நீங்கள் மனதின் இயற்கையான இயக்கத்தை எப்படி எதிர்கொள்ள வேண்டும் என்பது தெரியாமல், உங்கள் மனதில் தோன்றும் எண்ண உணர்வுகளை உங்கள் விருப்பத்திற்கு தகுந்தவாறு மாற்றியமைக்க, உங்களது முயற்சியால் இயற்கையான மன இயக்கத்திற்கு எதிராக ஏதோ ஒரு வகையில் குறிக்கிட்டு எதிர்த்து செயல்பட்டு வந்தீர்கள். இது உங்களுக்குள்ளே பெரும் மனபோராட்டத்தை ஏற்படுத்தி இருக்கும்.

இப்பொழுதுதான் முதன்முறையாக மனதின் இயக்கத்தில் நமக்கு எந்த ஒரு வேலையும் இல்லை என்பதை புரிந்து கொண்டிருக்கிறீர்கள். நமக்கு வரும் எண்ண உணர்வுகளுக்கு நாம் எந்த பொறுப்பையும் எடுக்க தேவையில்லை என்பதை புரிந்து கொண்டிருக்கிறீர்கள். மனதில் தாமாக தோன்றிய எண்ண உணர்வுகள் தாமாகவே மறைந்துவிடும். அதற்கு நாமாக ஒன்றும் செய்யத் தேவையில்லை என்பதை விளங்கிக் கொண்டீர்கள். இதனால் நம் மனதில் சுமந்து கொண்டிருந்த பெரும் அனுபவ சுமைகளை அப்படியே இறக்கி வைத்து விடுகிறோம்.

இதனால் உங்கள் மனம் மிகவும் லேசாகி போயிருக்கிறது. இந்த அனுபவம் உங்களுக்கு மிகவும் பிடித்து விடுகிறது. இந்த ஓர் உணர்வு நாம் இதுவரை அனுபவித்திராத ஒரு புதுமையான அனுபவமாக நமக்கு இருக்கிறது. நாம் எதையும் சுமக்காது ஒரு தளர்வான மன நிலையில் பாரம் இன்றி (Weight less) ரிலாக்ஸாக இருப்பதை அனுபவமாக உணர்கிறோம்.

இப்படி நாம் உணரும் அனுபவமும்தான் புரிதல் என்று தவறாக நினைத்துக் கொள்கிறோம். புரிந்து கொண்ட நமக்கு, இனி மனம் எப்பொழுதும் இப்படித்தான் இருக்கும் என்று தவறாக எண்ணி கொள்கிறோம். நம் மனம் எப்போதுமே எதற்கும் பாதிப்படையாத மன நிலையில் தான் இனி இருக்கும் என்று எண்ணி கொள்கிறோம்.மேற் சொன்னவை அனைத்தும் மன அனுபவம் தானே தவிர புரிதல் அல்ல. அனுபவங்கள் அனைத்தும் தோன்றி மறையக் கூடியவையே. புரிதல் என்பது மனதின் இயக்கத்தில் நமக்கு வேலை இல்லை என்பதை நாம் கண்டுபிடிப்பது மட்டுமே. புரிதல் என்பது அனுபவம் இல்லை. மனம் என்பது இயந்திர கதியான இயக்கம், அது நமக்கு கட்டுப்பட்டது அல்ல என்பதை புரிந்து கொள்வதே இந்தப் புரிதல்.

உதாரணமாக ஓர் அணையின் முழு கொள்ளளவும் தண்ணீர் நிரம்பி இருக்கிறது என்று வைத்துக்கொள்வோம். அதன் எல்லா மதகுகளும் திறந்து விடும் பொழுது தேங்கி இருக்கும் தண்ணீர் சீறி பாய்ந்து வெளியே சென்று மதகு மட்டத்தை அடையும். அடைந்தப் பிறகு தண்ணீர் வருவதும்

போவதுமாக இருக்கும். தேங்கியிருந்த தண்ணீர் பாய்ந்து ஆர்ப்பரித்து ஓடுவதற்கும் பிறகு தண்ணீர் சலனமில்லாமல் வருவதும் போவதுமாக இருப்பதற்கும் நிறைய வித்தியாசங்கள் இருக்கிறது. இதைப் போலத்தான் நாம் இந்த மனதின் இயக்கத்தை புரிந்து கொள்ளாதவரை தேங்கியிருந்த நமது மனோ அனுபவங்கள் அத்தனைக்கும் புரிதல் என்ற மதகு திறப்பின் வழியாக நம்மை விட்டு வெளியே பீரிட்டு பாய்கின்றன. இதை நாம் அனுபவமாக உணர்கிறோம். நாம் முதன் முதலாக இப்படி ஓர் அனுபவத்தை உணர்வது நமக்கு ஒரு மகிழ்ச்சியையும் ஆனந்தத்தையும் அளிக்கிறது. பிறகு மதகு மட்டத்தை தண்ணீர் அடைந்தபிறகு அனுபவம் வருவதும் போவதுமாக இருக்கும். நாம் ஆர்ப்பரித்து ஓடும் வேகமான அனுபவத்தை போலவே வருவதும் போவதுமான மனஅனுபவமும் இருக்கவேண்டும் என்று எதிர்பார்த்து விடுகிறோம். தேங்கிய அனுபவம் வெளியேறிய உணர்வை போலவே வருவதும் போவதுமாக உள்ள அனுபவமும் இருக்க வேண்டும் என்று எதிர்பார்க்கிறோம்.

புரிதல் என்பது, இயந்திர கதியான மனதின் இயக்கத்தில் நமக்கு எந்த வேலையும் இல்லை என்பதைக் கண்டுபிடிப்பதே ஆகும்.

இந்தப் புரிதலைப் புரிந்து கொண்ட பிறகு நமக்கு இந்த அனுபவம்தான் ஏற்பட வேண்டும், இந்த அனுபவம் ஏற்படக்கூடாது என்று நாம் கூறுவதற்கு எதுவும் இல்லை.

மனம் சந்திக்கும் சூழ்நிலைக்கு ஏற்ப ஏதோ ஒரு எண்ண உணர்வை வெளிப்படுத்திக் கொண்டே தான்இருக்கும். அது நமக்கு பிடித்த அனுபவ உணர்வாக இருக்கலாம், பிடிக்காத அனுபவ உணர்வாகக் கூட இருக்கலாம்.

புரிந்து கொள்வதோடு நமது வேலை முடிந்து விடுகிறது. அனுபவத்தை நிர்வாகிக்கும் எந்தப் பொறுப்பும் நமக்கு இல்லை.

புரிந்து கொள்வதில் எந்த குறைபாடும் இல்லை. மனோ அனுபவத்தை எதிர்பார்பதால்தான் அனைத்துப் பிரச்சினைகளும் ஏற்பட்டு விடுகிறது.

நமக்கு ஏற்பட்ட தளர்வான அனுபவத்தை புரிதல் என்று எண்ணிக்கொண்டு புரிதலையும் நாம் மனோ அனுபவத்தையும் இணைத்து தவறாக புரிந்து கொண்டு வருத்தப்படுகிறோம். புரிந்து கொண்ட நாம் திறந்த மனதோடு நமது எண்ண உணர்வுகளுக்கு முழு சுதந்திரம் அளித்து விடுவோம்.

புரிதல் ஏற்பட்ட ஆரம்ப காலகட்டங்களில் இதுபோன்ற பிரச்சனையை நம்மில் பலரும் சந்தித்து வருகின்றோம். அதனால் இதில் பெரிய தவறு ஒன்றும் இல்லை.

நமது புரிதலை நாம் உறுதிப்படுத்திக் கொண்டால் போதும்.

## பகவத் பாதை சந்தா விபரம்

நமது பகவத் பாதை மாத இதழானது ஒவ்வொரு மாதமும் 10-ம் தேதிக்குள் தபாலில் அனுப்ப வைக்கப்படுகிறது. இது அதிகபட்சமாக 15 நாட்களுக்குள் அனைவரது இல்லங்களையும் வந்து சேரும் என்று எதிர்பார்க்கிறோம். எனவே ஒவ்வொரு மாதமும் 25ம் தேதிக்குள் "பகவத் பாதை" தங்களுக்கு வராதவர்கள் போனில் தொடர்பு கொண்டோ அல்லது "Pathai Missing" என்று Type செய்து சந்தா எண்ணுடன் தங்களது முழு முகவரியையும் கீழ்க்கண்ட எண்ணுக்கு SMS அனுப்பியோ தகவல் தெரிவிக்குமாறு கேட்டுக்கொள்கிறோம்.

புதிதாக சந்தா செலுத்த விரும்புபவர்கள் இதுவரை சந்தா செலுத்தாதவர்கள், அல்லது புதுப்பிக்காதவர்கள் கீழ்க்கண்ட ஏதேனும் ஒரு வகையில் சந்தா செலுத்துமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

ஓர் ஆண்டு சந்தா - ரூ. 100/-
ஐந்தாண்டு சந்தா - ரூ. 500/-
ஆயுள் சந்தா - ரூ. 1000/-

சந்தாத் தொகையை "Sri Bagavath Mission" என்ற பெயரில் M.O. அல்லது சேலத்தில் செல்லத் தக்க D.D. (or) Cheque மூலம் அனுப்பலாம்.

வங்கிக் கணக்கில் நேரடியாக செலுத்துபவர்கள் HDFC Bank - Sri Bagavath Mission A/o. No. 15907620000075, NEFT IFSC : HDFC 0001590 என்ற கணக்கில் செலுத்தலாம். Bank A/c-ல் நேரடியாக செலுத்தியவர்கள் உங்கள் முகவரியை 7904118421 என்ற எண்ணிற்கு SMS மூலம் தகவல் தெரிவிக்க வேண்டுகிறோம்.

K.S. ஜீவமணி
செல் : 97891 65555

# ஆசிரியர் பகுதி



அனைவருக்கும் சக பயணியின் வணக்கம்.

நமது பகவத் பாதை மாத இதழ் தனது பயணத்தில் ஒன்பது ஆண்டுகளைக் கடந்து பத்தாம் ஆண்டில் அடியெடுத்து வைத்திருக்கிறது.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஞானத் தெளிவு தரும் கட்டுரை, திரு. சரவணன் அவர்களின் கேள்வி - பதில், மற்றும் ஜென் கதைகள் என பல வழிகளிலும் ஞானத்தை விளக்கும் வகையில் நமது பகவத் பாதை அமைந்துள்ளது.

இது அனைவரது இல்லங்களையும் சென்றடைந்து ஞான ஒளி ஏற்ற வேண்டும் என்பதே நமது நோக்கம்.

எத்தனையோ ஆன்மிக அமைப்புகள், மனம் அமைதி பெற தியானப் பயிற்சிகளையும் யோக சாதனைகளையும் வழங்கி வருகின்றன.

நாம் இவற்றைக் கடந்து இறுதி நிலையான முக்திக்கான ஞானத்தை வழங்கி வருகிறோம்.

நம் மனதின் இயற்கையான நிலையே முக்திதான். இதற்குத் தடையாக இருக்கும் அறிவுக்கு ஞானத்தை வழங்குவதே நமது நோக்கம்.

முந்தைய காலத்தில் பக்தியின் உச்சமான சரணாகதியால் முக்தி அடைந்தவர்கள் வெகு சிலரே.

தற்போதைய காலத்தில் இதுவும் சாத்தியமில்லாத ஒன்று.

ஆதலால் மதங்களைக் கடந்து மனித குலம் அனைவருக்கும் ஏற்ற வகையில் மனதின் இயக்கத்தைப் புரிந்துகொள்ளும் புதிய அணுகுமுறையில் பலருக்கும் ஞானத்தை வழங்கி வருகிறார் ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள்.

இதனை புதிய அணுகுமுறை என்று சொல்வதை விட சரியான அணுகுமுறை என்று சொல்வதே சரி.

காரணம் ஒரே அணுகுமுறை அனைவருக்கும் பயன் தர வேண்டும். அதுதான் சரியான அணுகுமுறை.

இதுவரை முக்திக்காக முயற்சி செய்தவர்களில் லட்சத்தில் எங்கோ ஒருவர், தீவிர முயற்சிக்குப் பிறகு ஒரு கையறு நிலையில் இந் நிலையை அடைந்தார்.

ஆனால் தற்போது ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் சரியான அணுகுமுறையில் திறந்த மனதுடன் தேடும் அனைவருமே இந் நிலையை அடைந்து வருகிறார்கள்.

எத்தனையோ மன போராட்டங்களிலும் பிரச்சினைகளிலும் சிக்கித் தவித்தவர்கள் கூட ஞானத்தை புரிந்துகொண்ட வினாடியே அனைத்தையும் கடந்து, மனப்பாரம் குறைந்து புறத்தில் சரியாகச் செயல்படும் நிலைக்கு திரும்பி இருக்கிறார்கள்.

இதைக் கேட்பதற்கு மிகவும் ஆச்சரியமாக இருந்தாலும் இதுதான் நடைமுறை உண்மை.

இதுவரை நமது அறிவு அகத்தையும் புறத்தையும் சீரமைக்க முயற்சி செய்து கொண்டிருந்தது. அதுவே அகப் போராட்டமாக இருந்து வந்தது. அறிவின் திசையை புரிதலால் புறம் நோக்கித் திருப்பியதே அனைத்திற்கும் தீர்வாக அமைந்தது.

ஆன்மிகம் என்பதே ஓர் அகத் தேடல்தான். புறத் தேடல் கூட ஒரு கட்டத்தில் நிறைவுக்கு வந்து விடும். ஆனால் அகத் தேடல் அப்படியல்ல. அறிவைக் கொண்டு தேடும் அகத் தேடல் என்றும் நிறைவுக்கு வராது. அகத்தை பொறுத்தவரை அறிவின் தோல்விதான் - சரணாகதிதான் தேடலை நிறைவுக்குக் கொண்டு வரும். இது புரிதலின் மூலமே சாத்தியம். அறிவை அகத்தில் சரணாகதி அடையச் செய்யும் புரிதலே ஞானம்.

மனித குலத்தையே மாண்பு பெறச்செய்யும் இப் புரிதலை உலகெங்கும் கொண்டு செல்வோம்.

சமூக இடைவெளியை கடைபிடிக்க வேண்டிய இக்கால கட்டத்திலும் நாம் Zoom meeting வழியாகவும், Youtube வழியாகவும் இப்புரிதலை வழங்கி வருகிறோம். தினம்தோறும் zoom meeting-ல் சத்சங்கங்கள் நடைபெற்று வருகின்றன. ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமையும் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுடன் சத்சங்கம் நடைபெற்று வருகிறது.

அந்த வகையில் சென்ற வாரம் ஞாயிறு காலை (1-11-2020) இஸ்ரேல் அன்பர்களுடன் ஆங்கிலத்திலும் மாலை தமிழிலும் நடைபெற்றது. எல்லா சத்சங்கங்களையும் YouTube - ல் பதிவேற்றம் செய்து வருகிறோம். இதில் கலந்துகொண்டு பயன் பெறுவதோடு தேடுதல் உள்ள நண்பர்களுக்கும் பகிர்ந்து பயன் பெறச் செய்யுமாறு அன்புடன் வேண்டுகிறோம்.

**ஞான ஒளியை ஏற்றுவோம்!**
**மனித குலத்தின் மன வலியை**
**அகற்றுவோம்!!**

# புரவலர்கள்

ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களுக்கு வணக்கம்.

நமது ஸ்ரீபகவத் மிஷனில் வருவாய் ஈட்டும் நோக்கத்தோடு எந்தச் செயலும் செய்வதில்லை.

அய்யாவின் கருத்துக்களை உலகம் முழுவதும் உள்ள ஆன்மிகத் தேடுதல் மிகுந்தவர்களிடத்தும், மனவேதனைகள் உள்ளவர்களிடத்தும் கொண்டு செல்ல வேண்டும் என்பது மட்டுமே நமது நோக்கம்.

இதன் காரணமாகவே ஐயாவின் அனைத்து நூல்களையும் மாத இதழ்களையும் இலவசமாக download செய்துகொள்ளும் வசதியையும், மிகக் குறைந்த விலையில் ஐயாவின் நூல்களையும் வழங்கி வருகிறோம்.

எனவே ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் வேண்டுகோளை ஏற்று தாங்களாகவே முன் வந்து அய்யா அவர்களது தனிப்பட்ட செலவுகளிலும் ஸ்ரீ பகவத் பவனின் செலவுகளிலும் பங்கு கொள்ளப் பலர் புரவலர்களாக இணைந்து பகவத் ஐயாவின் குடும்ப உறுப்பினர்கள்தாம் என உறுதி செய்துள்ளீர்கள்.

உங்கள் அனைவருக்கும் எங்களது உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

இதுவரை ஆயிரக்கணக்கானவர்கள் ஐயாவின் கருத்துகளினால் ஞானமடைந்துள்ளனர். இன்னும் ஆயிரக்கணக்கானவர்கள் ஞானமடையக் காத்திருக்கின்றனர்.

ஆன்மிக உலகில் இதுவரை இத்தகைய மாற்றம் ஏற்பட்டது இல்லை. இது ஒரு புதிய சகாப்தம்.

இதற்கு முன்னால் எங்கோ ஒருவர் எப்படியோ ஞானமடைந்திருப்பார். ஆனால் இப்போது எவர் வேண்டுமானாலும் ஞானமடையலாம் என்ற அளவில் ஞானமும் முக்தியும் எளிதாக்கப்பட்டுவிட்டன.

ஆன்மிகத்தில் பல காலத்தேடுதலில் கூட கிடைக்காத ஞானத் தெளிவு ஐயாவின் புதிய சரியான அணுகுமுறையினால் எளிதில் பலரும் துன்பங்களையும் துயரங்களையும் கடந்து விடுதலையோடு வாழ்ந்து வருகின்றனர்.

ஆன்மிக ரீதியாகவும் உளவியல் ரீதியாகவும் புதிய மாற்றத்தை ஏற்படுத்தக் காரணமான நமது அய்யாவுடன் நாம் அனைவரும் முதல் நிலை குடும்ப உறுப்பினர்களாகப் பங்கு வகித்திட இதனை ஒரு நல் வாய்ப்பாகப் பயன்படுத்திக் கொள்வோமாக.

மேலும் புரவலராக இணைய வாய்ப்புள்ள அன்பர்கள் இணைந்து உதவுமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

இதன் மூலம் வியாபார நோக்கில் ஈடுபட்டு வருவாய் ஈட்டுவதில் நாட்டமில்லாத நமது ஸ்ரீ பகவத் மிஷன் மற்றும் ஸ்ரீ பகவத் பவன் ஆகியவற்றின் தொண்டிலும் அன்றாடச் செலவினங்களிலும் நீங்கள் பங்கேற்றிட முடியும்.

மாதந்தோறும் ரூ1000/= வழங்கும் புரவலராகவோ அல்லது மாதந்தோறும் ரூ500/= வழங்கும் சிறப்புப் புரவலராகவோ பொறுப்பேற்றிட வேண்டுகிறோம்.

ஸ்ரீ பகவத் மிஷன் Account HDFC Bank & SBI Bankல் உள்ளது. இவற்றில் எதில் வேண்டுமானாலும் அனுப்பலாம்.

**Sri Bagavath Mission,**
Hdfc bank A/c No.15907620000075
NEFT IFSC : HDFC0001590

**Sri Bagavath Mission,**
SBI Bank A/c No. 31784345329
IFS Code: SBIN0012772

அன்புடன்
**ஜீவமணி & சரவணன்,**
ஸ்ரீ பகவத் மிஷன்.




அனைவருக்கும் வணக்கம்.

**ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் மிக முக்கியமான நூல் "கவலைகள் அனைத்திற்கும் தீர்வு"** எனும் நூல்.

இந்நூல் மனிதகுலத்தின் எல்லா துக்கங்களையும் துயரங்களையும் எளிதில் **கடந்து செல்லும்** வல்லமையைக் கொடுத்து ஞானத்தெளிவை வழங்கும் நூல்.

இந்நூல் 258பக்கங்களில் மிகவும் தரமான முறையில் வடிவமைக்கப்பட்டுள்ளது.

இதுவரை இந்நூல் ரூபாய் **250/-** க்கு வழங்கி வந்தோம். தற்போது இந்நூல் அனைவரையும் சென்றடைய வேண்டும் என்ற நோக்கில் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஆலோசனைப்படி இந்நூலை அதன் அடக்கச் செலவைவிட குறைந்த விலையில், ரூபாய் **50/-** க்கு வழங்கி வருகிறோம்.

எனவே அனைவரும் வாங்கிப் பயன் பெறுவதோடு நண்பர்களுக்கும் உறவினர்களுக்கும் அன்பளிப்பாக வழங்கி அவர்களும் உயர்வு பெற உதவலாம்.

அன்புடன் **ஸ்ரீ பகவத் மிஷன்**

ஆகாமிய கர்மா நூலின் மூன்றாம் பதிப்பு

**கர்ம வினை– விடுபவது எவ்வாறு ?**

என்ற தலைப்பில் மேலும் 4 புதிய கட்டுரைகள் இணைக்கப்பட்டு ஆகஸ்டு மாதத்தில் வெளிவந்துள்ளது.

விலை ரூபாய் **150/-**

ஆகாமிய கர்மா நூலின் மூன்றாம் பதிப்பு கர்மவினை – விடுபடுவது எவ்வாறு? என்ற தலைப்பில் வெளியிட்டுள்ளோம்.

இதில் புதிய இணைப்பாக மேலும் நான்கு கட்டுரைகளை இணைத்துள்ளோம்.

1. தற்கொலை
2. இந்தப் பிறவியில் செய்த பாவங்களுக்கான தண்டனை அடுத்த பிறவியில் கிடைக்குமா?
3. அமானுஷ்யம்.
4. ஜாதக ஜோதிடம்.

அனைவரும் வாங்கிப் பயன் பெறுமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

**ஸ்ரீ பகவத் மிஷன்**



# ஜென் கதை

## தியானம் செய்

Registration Number of the Registered News Paper TNTAM/2014/57698 |
Postal Registration Number : TN/WR/SL(E)/22/2018-2020
Date of Publication : First Week of Every Month |
Posted at Salem HOP 636001. On 10th of every month.

Published by Shri. V.A.P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission,
31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu. India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K.S. Jeevamani Cell : 97891 65555

ஜென் குருவிடம் ஒருவன் வந்து

"எப்படி தியானத்தில் ஈடுபடுவது...?"

என்று கேட்டான்.

"என்னைப் பார்த்துக் கொண்டிரு.

தியானம் உனக்குக் கைவரும்" என்றார் ஜென்.

அவனும் சம்மதித்தான்.

காலையில் குரு எழுந்தார்.

குளித்தார்...

குளித்து விட்டு தியானம் கற்றுத் தருவார் என எண்ணி காத்திருந்தான்.

பிறகு தோட்டத்தில் குழி தோண்டினார்.

பகல் முழுவதும் தோட்ட வேலையில் ஈடுபட்டார்...

இவனும் வேலையெல்லாம் முடித்துவிட்டு வந்து கற்றுக் கொடுப்பார் என காத்திருந்தான்.

உணவு வேளையில் அவனுக்கு தேவையான உணவுகளை வழங்கிவிட்டு தானும் உண்டார்....

உணவுக்குப் பின் கற்றுத் தருவார் எனக் காத்திருந்தான்.

மாலை மங்கி இரவு வந்துவிட்டது.

ஆனால், குருவோ, வழிபாடு, பிரார்த்தனை, தியானித்தல், படித்தல் என்றெல்லாம் எதுவும் செய்யவேயில்லை.

இதில் மனம் சலித்த சீடன்,

"எப்போது தான் தியானம் கற்று தருவீர்கள்?" என்றான்.

குரு அவனை அமைதியாகப் பார்த்துவிட்டு புன்னகையோடு சொன்னார்,

"நான் தோட்டத்தில் குழி வெட்டியதும் தியானம்தான்...

"தோட்டம் போட்டதும் தியானம்தான்....

"உணவு உண்டதும் கூட தியானம்தான்...

"எனது வாழ்வே தியானம்தான்....

"எனது வாழ்வில், தியானம் என்ற ஒன்று தனியாக இல்லை"

என்று சிரித்தபடி சொன்னார் ஜென் குரு.

மனதளவில் விடுதலை பெற்றவர்கள் விழி மூடி அமர்ந்திருக்க வேண்டிய அவசியமில்லை.

அகம் விடுதலையோடு இயங்கும் போது நாம் தனியாக தியானிக்க வேண்டிய அவசியம் இல்லை.

புறச் செயல்களில் தியானம் அவசியம். தியானமாகச் செய்யும் செயல்களில் நேர்த்தியும் ஒழுங்கும் தாமாகவே வந்துவிடும்.

**அகம் – விடுதலையால் அழகு பெறுகிறது.**

**புறம் – தியானத்தால் அழகு பெறுகிறது.**